ஞானமாம் நீராகுமவருடையமனதுறந்தால், பொறைகண்டோ
ரவர்பெருமையுமாகக் கண்டாம் பூவுலகிலறியாமல் புகழ்வார் நல
லோர், அனைகண்டோரஞ்சமுறையிலமூர்த்தங்கொண்டோ ரப்படிமா
நமனைவிடவல்லோராமே ... ... ... (௫௱௰௨)

வலலோர்களாகமத்தின் பொருளையெல்லாம் வகைவகையாய்
வகுத்தறிந்துமனமொன்றாகி, புல்லோர்கள் சங்காதங்கடிந்துதள்ளி
பொறையுடையதபோதனைப் போற்றிநிற்போர், நல்லோரிய
வர்கண்டாய் செகத்திலெல்லாம் நமனிலைநமனில்லைநாட்டிலே
ன்றுஞ், சொல்லார்களுண்மைதனையார்க்காகிலுஞ் சொல்லுவார
றிவில்லாத்துட்டர்காணே ... ... ... (௫௱௰௩)

காணப்பாபண்டிதத்தின்தொகையேதென்றால் கட்டுமாந்தே
னென்பாடலிரண்டுலட்சம், பூணப்பாதன்வந்தரியகவால்நாலும்
புகட்டிருநாதியிலேபோக்கோமத்தை, விளைவயாவுலகத்துப்பண்
டிதருமொன்பார் விதியறியார்மதியறியார்வலலோர்நேயமாய், பூண
ப்பாமூலமென்றதத்துவத்தைக்கண்டா லுடன்சித்தியாகும்படாளு
ணிப்பாரே ... ... ... .. ... (௫௱௰௪)

பாரப்பாநிமலசித்தர் சித்தர்முத்தர் பழமறைகளனைத்துமொ
ருபார்வைகண்டோர், ஆரப்பாபஞ்சகர்த்தாளிவர்கடகோப்பல்ல அ
றிக்கையென்றமுத்திமையறிந்தாராகில், யோரப்பாஅடிமுடியுமு
டிமொன்றாய் வெல்லரிது அவருடையபொருளோதியும், தாரப்பாவ
டியாகும்பூவொன்றாகும் சொன்னதெல்லாமவர்க்கிசையைச்சூட்டி
க்காணே ... ... ... ... ... (௫௱௰௫)

காணவேவயித்தியந்தா னிறைலையக்கேளு கற்றறிந்துபலநூ
லுங்கருபுங்கண்டு, பூணவேதத்துவஞ்சால்நூலுங்கண்டு போக்கோ
டேதாதுலட்சணமுங்கண்டு, தோணவேசரக்கினுட ஆதிகண்டு சுத்
திகண்டுஅரைப்பினுடசூதங்கண்டு, ஊணவேபுடபாகமெரிப்பின்
பாக மூத்தமனேசெந்தூரமுயரும்பாகம், நாணமேயிடைபாகம்
நோயின்பாகம் நலமானகுணபாகம்நாட்டந்தானே ... (௫௱௰௬)

தானென்றசரீரமிலன்சஞ்சாரங்கள்சாப்பிடும்அன்னத்தின்தா
க்கும்பார்த்து, நானென்றசொல்லற்றுக்குருவைப்பார்த்து நலமா
னவாத்துமசொரூபங்கண்டு, மாயையென்றமாயையிலேமயங்காடா
மல் வாழ்ந்திருப்பார்பெரியோர்கள்வயித்தியன்காண், தானென்ற
அகமமதைவிட்டுத்தள்ளிதன்னிலையேதன்னிலையாய்சார்ந்துபார்.

அரிதாரபற்பம்.

பாரப்பாவரிதாரபற்பந்தன்னைப் பாடுகிறேன்பொன்தாரம்
பலந்தானாறு, நேரப்பாநற்காரத்தையஞ்சாங்கபற்பப் நீற்றியே

றாப்படியும்நினைவாய்வாங்கி, சேரப்பாசட்டிக்குள்சாம்பலிட்டு
இறக்கமேவவர்நாரம்பாதிமேலும், வாரப்பாசாம்பலிட்டுச்சட்டிமூ
டி வளிம்பெல்லாஞ்சீலைசெய்துமண்ணுஞ்செய்யே ... (௫௧௮)

செய்துதானெடுப்பேற்றி யறுநாள்மட்டும் தியாருதேயெரித்
துவாங்கிப்பற்பம், சாலவ்வபணவிடைநற்றேனிலூட்டு சலபுண்ணு
ஞ்சூலையடுவாதவாய்வும், வாலைப்பெண்போலவருஞ் சயமும்
போக மாட்டுதற்குதிரிகடுதேனுந்தானும், காலனும்போய்களெ
ல்லாமரிதாரபற்பங் கைமுறையாப்புலத்தியமேசகண்டிடாயே ()

கண்டிட்டரிஷியிறெனும்முனிவர்தேவர் கணநாதர்சித்திரர்களு
ம்யோகிஞானி, உண்டிட்டார்பலநாளும்பலமுகமாய்பாடி பூரி
லையலைந்திட்டவும்பித்தரெல்லாம், கண்டிடார்கற்பங்களமுதமுன்
னோர் கருவிபுட்கருவிகளுங்காணார்காணார், பண்டிட்டார்சேகண்டி
யமுறைத்தாரப்பாபார்த்தறிந்தோன்மெய்ஞ்ஞானிபார்த்திடாயே()

பார்த்திடவேயிரண்டுபலந்தாரம்வாங்கி பாக்கவேநறுக்கிநீய
ன்பாய்மைந்தா, சேர்த்திடவேசாரணையைமூலமாட்டி செப்பரி
யசட்டிக்குள்முகாவிட்டு, வார்த்திடவேசட்டிமேல்தாரம்வைத்து
மறுபடியுஞ்சாரணையைவைத்துமூடி, நேர்த்திடவேசீலையிட்டுச்சீ
லைசெய்து நினைவாகமூடியேமண்ணுஞ்செய்யே ... (௫௨௧)

மூடியேதீயெரிப்பாய்சாமநாலு முதிரவேயாறியதுயிறக்கி
வைத்து, நீடிநீசட்டிக்குள்பற்றித்தீய்ந்து நின்றதெல்லாங்களைந்து
மற்றதெல்லாம்பற்ப, மூடிநீகல்வத்திற்றாளாயாட்டி யுற்றசிறுகுழ
விலடைத்துவைத்து, நாடிநீபதினெட்டுகுட்டந்தீர நலமான
பொருக்குடனேகிரும்புசேரே ... ... (௫௨௨)

சேரப்பாசமபாகந்தயிலம்வாங்கி சிறப்பாகப்பணவிடைதா
ன்தயிலத்துள்ளே, ஆரப்பாயற்பத்தில்பணத்திற்பாதி யளித்திட
வேகுட்டரோடுபுண்ணும்நோவும், பேரப்பாயொழிந்துவிடுந்தே
னுங்கூட்டு, பலத்தூட்டிபட்சமொன்றுயிறிந்துபோகும் நேரப்
பாவிவைக்கெல்லாம் பத்தியங்கேளு, நெய்யாகும்பாலாகும்பழ
முமாமே ... ... ... ... (௫௨௩)

அபிரகசெந்தூரம்.

பழமாகும்வெள்ளாட்டினிறைச்சியாகும்பண்ணுமற்றவெந்நீ
ராய்பருகவேணும், சௌந்திருமபிரகசெந்தூரஞ்சொல்வேன் சக
லசங்கநோய்க்கெல்லாஞ் சஞ்சீவியாகும், விளந்திருந்தாரமொன்
றுசெந்திரியொன்று மிக்கநாவலபட்டைபோடுவரசம்பட்டை, யள
ந்தீரப்பாகவிலை பருத்தியிலையுமப்பனேசரியேயடையாய்ச் சேரு
சேரே ... .. ... ... (௫௨௪)

பலமுங்காலாற் கொண்டாட்டிப் பண்டத்திலேயுதித்து நீயு, மிட்டமுட
டன்பட்டைத்தோல்கூடச்சேர்த்து விலைதனையபாவின்பாலிதமா
யூற்றே ... ... ... ... ... ...(௫௱௧)

இதங்கேளுபசுவினெய்யோர்படியும்விட்டு யிளக்கியேகுழ
ம்பாக்கியடுப்பிலேற்றி, இதங்கேளுகடுகையொன்று கமலவண்ணி
யேற்றிடவும்விடாயம்லகிண்டிக்கிண்டி, பதங்கேளுமயனம்போல்
பக்குவத்திலேதப் பதறுமல்நன்றாகயிளக்கிலைடைந்தா, மதங்கேளுமா
றுபலஞ்சீனிதூவி மறுபடியுங்கம்பாலேசீனிகிண்டே ... (௫௱௨)

சீனியிட்டுக்கிண்டியொருகலத்திலிட்டு தினமூன்றுசெறமி
ன்புதாணிக்காய்போல், சீனியிட்டுவைத்திருந்தமருந்தைவாங்கி திர
ட்டிவாயிருவேளைதின்றபோது, சீனியிட்டமண்டலந்தானருந்தினு
க்கால் தீருகிறநோய்கேளுகிராணிசூலை, சீனிவிட்டுப்பறங்கிப்புண்
குட்டம்வெட்டை சிரசில்வருஞ்சூலைமுதற்கறப்பான்போமே...()

சூலைபோங்கபாலத்திற்குட்டம்போகு துயர்விளைக்கும்நாவ
தலிற்சூலைபோகும், சாலைபோம்வெடிசூலைநெஞ்சிற்சூலைதட்டிமு
யித்தொடித்தாற்போற்சரீரசூலை சிலைபெற்றவழல்வாதங்கழல்வாத
நீங்கும் தீயெரிக்கும்விலாவெலும்புவீக்கஞ்சோகை, காலைபோல்
முடக்குசூலைபக்கச்சூலை கைச்சூலைகறப்பன்முதல்கழன்றுபோமே ()

போகின்றவியாதிகட்குப் பத்தியந்தான் புலத்தியனேகன்
மணியேஞானமூர்த்தி, வாகின்றசரீரங்கள்பிலமறிந்து வந்தினமு
ன்பித்தவெட்டைவாதவெட்டையாலும், போவதற்குப்புளியுப்பை
மாற்றச்சொல்லு பெருங்கோழிமுருங்கக்காய் துவரைப்பருப்பு, ஆ
வதற்குமுசலும்புகீரைத்தண்டுவட்பனைசிறுகீரைபகரக்கேளே ()

பகரக்கேள்மிளகுமஞ்சள்வெந்தயமீருள்ளி பரிவானவெள்
ளுள்ளிசீரகங்கருவேம்பு, பகரக்கேள்பெருங்காயம்பத்தியத்துக்
காகும்பனைவெல்லநல்லவெல்லமிரண்டுமாகும், பகரக்கேளிப்படி
யேசாப்பிட்டாக்கால் பற்றற்றுவல்வினையும்பறிப்போகும், பகர
க்கேள்வாதவுடல்தூலகாயம் பத்தியஞ்சிற்றுப்பிட்டும் பார்க்கச்
சொல்லே ... ... ... ... (௫௱௬)

உருக்குச்செந்தூரம்.

பாரப்பாலோகமென்றவுருக்குதனைப்பாடுகிறேன்காமாலை
பாண்டுதிர, சீரப்பாவதின்பெருமையென்னசொல்வேன் தெசமு
கபுரயாக்கினி செந்தூரமென்பார். சேரப்பாகுதமொன்றுகெந்தி
ரன்டு சிறப்பானகாந்தமறுபலமுநாலு, நேரப்பாயுருக்குத்தூள்
பலமுநாலு நெகிழாட்டுகற்றாழைச்சாறுவார்த்தே ... (௫௱௭)

கற்றாழஞ்சாற்றிலேகடுகைநாலுகளிப்போலேயாட்டிலேவி
ல்லைகட்டி [illegible] சட்டியிலாவிலைப்பரப்பி மேன்மை[illegible]

லைதனையிலையால்மூடி, கொற்றுளஞ்சீலைசெய்துமண்ணுஞ்செய்து
கொடியதோரடுப்பேற்றித்தீயைமூட்டி, முற்றுனமூன்றுபத்துக்
கடிகையங்கே மூட்டிநீபார்ப்பளவில்செந்தூரமாமே... (௫௩௮)

ஆகியதோர்செந்தூரந்தூளாயாட்டி யடைத்திடுவாய்குழல்த
னிலேயன்பாய்மைந்தா,பாகியதோர்சுக்குத்தூள்விராகனெடைபாச்
சடாசெந்தூரப்பணந்தான்மூன்று, வாகியதோர்நெய்தேனிலுண்
ணச்சொல்லு வலியதொருபெருவயிறுகாமாலைசோகை, யேகிய
தோர்பாண்டுபித்தப்பிவிஷபாகந்தா னிந்தனத்தில்வீழ்தீப்போலெ
ரியுந்தானே ... ... ... ... ... (௫௩௯)

லோகபற்பம்.

தானென்றவுதயாக்கினிதெசமுகமாய்பற்பம் சாற்றுவேன்ர
சங்கெந்தியனைப்பொடியுங்காந்தந், தேனென்றவகையொன்றுகழ
ஞ்சிரண்டு சிதறுமல்கற்றாழைச்சாற்றிலாட்டி, மானென்றகல்சத்தி
விட்டுவைத்து வாய்மூடிப்பார்த்திருக்கவேகும்பாரு, கானென்ற
சாற்றுநீலையாறவிட்டுக் கலாட்டிமூன்றுதிரம்வேகவையே (௫௪௰)

கலந்ததொருமருந்தங்கேயாறிற்றானால் கல்லிலிட்டுஆர்க்கவே
தூளாயாட்டி, யலர்ந்ததொருவனுபானம்வாய்வுக்கானு லப்பனே
திரிகடுகுபொடியாய்ச்செய்து, குலர்ந்ததொருபற்பத்தில் பணவி
டைதானிரண்டு கூட்டிநீபொடிரண்டுகாசிடையில்சேர்த்து, வலர்ந்
ததொருவுட்கொள்ளத் தேனிற்சேரு வாயுவறுஞ்சன்னிக்கும் வரி
சைகேளே ... ... ... ... (௫௪௧)

வரிசைபெறப்பற்பத்திற்பணந்தானிரண்டு வாங்குநீவெள்ளு
ள்ளித்தயிலத்தூட்டு, பிரிசைபெறப்பிறமேகந்தீரவென்றால் பேரு
னமறுதோன்றிச்சாற்றிலூட்டு, பரிசையாயெரிகுன்மம் போகவெ
ன்றால் பருஞ்சீந்திற்றண்டுநீர்பரிவாயூட்டு, உரிசைபெறவாதங்கள்
தீரவென்றாலுய்த்தநொச்சிகொடுவேலிகொழுஞ்சில்வேளைதானே.

வேளையிலேமுருங்கைத்தோல்சாற்றிலாதல் விளைந்திடவேவா
தம்போமிகுதியாகில், நாளையிலேபெருங்காயந்தன்னிலூட்டுநல்ல
மஞ்சள்காமாலைநாசமாகத், தூளையிலேபூவரிசிசீரகமுநேராய் தூ
ளாட்டிப்பாலிலேயுண்ணப்போகும், காலையிலேவெல்லமிடுபிறிக்
கவென்றால் காக்காயைவெள்ளியன்றுபிடித்திடாயே ......(௫௪௩)

பிறிவு.

பிடித்ததொருகாக்கையுடவாயில்கேளு பெருக்கவேயுப்பிட்
டுவிடத்தலையின்விறகா, லடித்ததொருவுசிலையுடவிறகுங்கூட வடுக்
கியேதீயெரித்துச்சாம்பலாக்கி, நடித்ததொருசாம்பல்வே றுப்பு
வேறாய்ரண்டையுந்தான் வீட்டின்மேல்தூவக்கேளு, குடித்ததொ

ணுயெண்ணெய்கொப்பளித்தாப்போல கூட்டமெல்லாம்வெவ்வே
றேபிறிந்துபோமே ... ... ... ... (ருசரு)

கோடாகோடிகுளிகை.

கூட்டமெனும்நோயறவேகோடாகோடி குளிகைதனைக்கூ
றுகிறேன்கூர்ந்துகேளு, கூட்டவேநாவிரசங்காந்தங்கெந்தி யிதமான
தாளகமுஞ்செங்கொட்டைபருப்பு, நாட்டமுள்ளதிப்பிலியுந்திரிப
லையுமுள்ளி நயமாகவகையொன்றுகழஞ்சியொன்று, காட்டமெனு
ஞ்செப்புத்தூளீராறுக்கும் கழஞ்சப்பாவக்கிரு காரமொன்றே ()
ஒன்றானநவாசசாரம்நீர்வள்ளிவிலாதா ளூற்றநிலைப்பனைக்கி
ழங்குமாகக்கூட்டி, நன்றாகநாலொன்றுகரிப்பான்சாற்றில் நலமா
கவிடாமலேகடிகையொன்று, அன்றாடமெட்டுநாளரைத்தநீயு ம
ப்பனேயுருத்தபோல்குளிகைகட்டி, ஆன்றாளும்வியாதிக்கிங்கு
திகண்டு கொடுத்திடவுமாள்பிலமும்குறித்துப்பாரே ... (ருசசா)
பார்த்துச்செய்பிலவுநதியானபேர்க்குப் பழச்சாற்றிலிரண்டு
ண்டைபதமாயூட்டு, சேர்த்துச்செய்செறியாமைகுணத்துக்கென்
றால் செப்பரியபசுவினெய்கிறுணியானால், சேர்த்துச்செய்சுக்கு
நீர்தன்னிலூட்டு சுகமானமோராகுமுள்ளங்கிநீராம், காத்துச்செய்
விரோசிக்கவேரண்டெண்ணெய் கட்டுமலங்கழற்றவென்றால்வெல்
லத்தூட்டே ... ... ... ... ... (ருசஎ)
ஊட்டுவாய்பழச்சாற்றில்விஷத்துக்கென்றாலூட்கொண்டுமே
லுக்குத்துவாலைபோடு, நாட்டவேநெல்லிமுள்ளிச்சாற்றிலுலும்நா
சமாய்விலையனைத்துநன்றாய்க்கேளு, பூட்டடாநீர்பிளவைவெள்ள
டைப்பு புகழானவெலபனத்துக்கெல்லாமேதான், நீட்டடாமுத்தக்
காசிடித்தநீரில் நேரானகிறுவலிக்குநேரேகேளே ... (ருசஅ)
நேரானவசீரணமுங்கிறுணிசூலை நிலையாதகடுஞ்சூலைக்கெல்
லாமப்பா, வேறானமுருங்கைத்தோல்சாற்றிலூட்டு மிகுந்தசெரி
யாமைக்குத்தயிரிலூட்டு, வாறானசன்னிக்குமத்தஞ்சாறு மைந்த
னேயுள்ளுக்குமேலுமேபூசு, கூறானமூச்சடைப்புச்சுவாசகாசம் தீ
ரவேவெள்ளாட்டுப்பாலிலூட்டே ... ... ... (ருசகூ)
ஊட்டுநீபிறமேகமுடனேநீரு முறவாலநொச்சிச்சாறூட்டு
ஊட்டு, நாட்டுநீகண்டுகைச்சல்போகவென்றால் நலமானபழச்சாற்
றில்நெற்றித்தேய்ப்பாய், நீட்டுவாயுடலெரிவுபோகவென்றால் நெ
ல்லிக்காய்ச்சாற்றிலேநினைவாயூட்டு, கூட்டுநீதண்ணீரில்பித்தம்போ
கும் கூறானகளநீரிலூட்டவுத்தனைப்போமே ... ...(ருருய)
போடாமடாவாய்வாதம்நடுக்குவாதம் போவதற்குச்சாதிக்கா
ய்பொடியிலூட்டு, ஆருமடாவுடல்வீக்கமமுரிதன்னிலூட்டு வட்
டனேவிஷக்கடியும்விஷமும்போக்க, வாருமடாவஞ்சினைக்குச்சுக்

ருத்தண்ணீர் வலிகடுப்புத்திரவென்றால்வசம்புத்தூளில், ஏகுமடா
வாதமதுமுள்ளிச்சாற்றி லியலான வனுபானங்கோடிதானே - ௫௫௧

வாய்வுக்குத்தைலம்.

கோடியென்றவாய்வுக்குத்தயிலஞ்சொல்வேன் கூறக்கேள்பு
லத்தியனே குறுக்குதிட்டம், தேடிநீவெள்ளுவாய்வெறுநொச்சிவே
ருஞ் சிற்றாமணக்கின்வேர்வகைக்குக்கேளு, கேடில்லாப்பலமொன்
றாயிடித்துவாங்கி கிருபையுடனலம்பத்துப்படியும்விட்டு, நாடிநீ
யெட்டொன்றாய்க்குறுக்குவாங்கு நாட்டுசிற்றாமணக்கெண்ணெ
ய்படியுமொன்றே ... ... ... ... (௫௫௨)

ஒன்றானகள்ளிப்பால்படிதானொன்று உத்தமனேவெள்ளுள்
ளிபலந்தானிரண்டு, நன்றாகக்கோசலந்தான் படியுமொன்று நல
மானதிப்பிலியும்பலமுமொன்று, குன்றாமலாட்டியந்தத்தயிலத்திட்டு
குறுக்கியந்தப்பதமறிந்துவடித்துக்கொண்டு, நின்றுபீசனுக்குப்
பூசைசெய்துநினைவோட்டகாசைதானுண்ணுஞ்சொல்லே ( )

ஆனந்தவயிரவம்.

உண்டுவுடன்வாயுவென்றதனைத்தும்போகு மொழியாதவாய்
வென்றால்கோடாகோடி, யுண்டையிட்டுவுண்ணச்சொல்திருந்திரு
த்தமனேயானந்தவயிரவனைக்கேளு, உண்டாகும்வியாதிகளில்சு
ரங்கள்கூடி ஆசிதமடாவியாமுடனுற்றுக்கேளு, உண்டாகுமதின்
பெருமைசெந்தூரக்குளிகை யுற்பனத்தையாருக்கு முனாக்கொ
ண்ணுதே ... ... ... ... (௫௫௪)

உரையாதகூதமொருபலமுந்தூக்கு உற்றரசசெந்தூரம்பல
முமொன்று, நிரையாதகெந்தகமுப்பலந்தானொன்று நேரானவப்
பிரகம்பலமுமொன்று, கரையாதநாவியோபலமுமொன்று காலு
ப்பாமூன்றுபலஞ்செவ்வாலங்கொட்டை, வரையாதயிலைவேரநாக
வல்லிச்சாற்றில் மயனம்போலாட்டிநீவழித்திடாயே ... (௫௫௫)

வழித்ததொருமருந்துக்குவயணங்கேளு மைந்தனேவெற்றி
லையயணாத்துவாங்கு, வழித்திவோய்விரற்கனத்தில்குகைக்குள்நீயு
மறுபடியுமருந்தந்தக்குகைக்குள்வைத்து, வழித்தணாத்தவெற்றிலை
யைகுகைமேற்பூசிவாகானசீலைசெய்துமன்னுஞ்செய்து, வழித்த
ங்கேபுடமொன்றுபோடுபோடுவளாருணன்போலிருக்கும்வரிசை
கேளே ... ... ... ... (௫௫௬)

கேளப்பாசெந்தூரமெல்லாம்வாங்கி கிருபைபுரிசெவ்வாலங்
கொட்டையோடு, வாளப்பாநாவியிலைபலமிரண்டு மாட்டுநீவெற்
றிலைச்சாற்றதனால்நன்றாய், நாளப்பாவொன்றரைத்துவழித்துநீயும்
நற்குன்றிப்பிரமாணமுண்டைகட்டி, மீளப்பாசுக்குயிர்த்துசித்திர
மூலப் பீறாமல்பொடிசெய்துவெருகஷ்தான் தூக்கே ... (௫௫௭)

தாக்கியதோர்பொடியிலொருகுளிகையிட்டு சுடுசலத்திற்சங்கையிலாதவூட்டு, தாக்கியதோர்சுரமெல்லாந்தீருந்தீரும் தடைபட்டசுரகுலகிராணிபாண்டு, தேக்கியதோரிவைகுணமாங்குன்மத்துக்குஞ் செல்லுத்திறலினைத்தும்போம் பத்தியத்தைக்கேளு, ஆக்கியதோர்சுரத்துக்குப்பாலாமற்றேன் றுகாதுபுளிபுடலிலடுத்திடாதே ... ... ... ... (ருருஅ)

இரசாயனவயிரவம்.

அடுத்ததொருரசாயனவயிரவத்தைச்சொல்வோமப்பனேமச்சகேந்திரமறிந்துகொள்ளு, தொடுத்ததொருநோய்க்கெல்லாஞ்சம்பிரதாயம் தொடுமுன்னேநோயெல்லாந் தூளாய்ப்போகும், கடுத்ததொருசூதம்ரண்டுவசம்பிரண்டு கழஞ்சப்பாகுக்கிரண்டுமிளகிரண்டு, எடுத்ததொருயிந்திரண்டுவாளம்ரண்டு இயல்பானதிரிபலையுங்கழஞ்சிரண்டே ... ... ... ... (ருருகூ)

இரண்டாகுமுத்திராட்சமிவைக்குநேரா யிட்டிடுவாய்வெள்ளுள்ளிப்பருப்புதானு, மிரண்டாகும்பாண்டத்திலிட்டுக்கண்டுசுரமதற்குள்ளியிடதயிலங்கொண்டு, இரண்டாகுஞ்சாமமொன்றுமத்தித்தபின்பு யெருக்கம்பால்வார்த்துமொருசாமமத்தி, இரண்டாகுஞ்சாமமொன்றுவெள்ளாட்டுப்பாலி லிட்டிளக்கிக்கெண்டைமீனபித்துவாங்கே ... ... ... (ருசுய)

வாங்கியேபித்துக்குள்சாமமொன்று மத்திச்சுஆறியபின்னெடுத்துமைந்தா, பாங்கியதோர்குன்றியிடைகுளிகைகட்டிப் பதமலத்தந்தவியாதியார்த்து, தாங்கியதோர்கரிப்பானிலீருள்ளிநீரில் சுளந்தீருமிஞ்சிச்சாறிவையிலூட்டு, தேங்கியதோர்முயல்மூர்ச்சைவாய்வுமூர்ச்சை சிலேற்பனமூர்ச்சையிவையணைத்துப்போமே ()

சிலேற்பனகுளிகை.

போமப்பாதலைவலியுஞ்சன்னிமூர்ச்சை புகழானகாலாதிவேதனையாமூர்ச்சை, யாமப்பாமூக்கினீர்ப்பாய்ச்சல்தானு மரோசிமுதல்பறந்தோடும்பகரக்கேளு, வேமப்பாசுரமெல்லாமொழிந்துநிற்கும் மென்சிலேற்பனமென்றகுளிகைசொல்வோம், நாமப்பாசிலையொன்றுதுத்தமொன்று நயமாகசுத்திசெய்தெடுத்திடாயே ()

எடுத்திடாய்மோர்காச்சித்தெளிந்துகொண்டு இதமாகச்சாமமொன்றுஆட்டிவாங்கித், தொடுத்திடாய்மிளகிடைக்குக்குளிகைகட்டிச் சுரங்களுக்குப்பசுவின்மோர்க்குள்ளேயூட்டு, விடுத்திடாய்ச்சுரமெல்லாய்விட்டுப்போகு மீறியதோர்சிலேற்பனத்துச்சுரத்துக்கெல்லாம், கொடுத்திடாய்சுவாசகுடோரிமாத்திரை கூறுவேன்மருந்துவகைகூறுவேனே ... ... ... ... (ருசுக)

சுவாசகுடோரி.

கூறுவேனரிதாரமிரதஞ்சுக்குகூர்மையுறுவெண்காரந்திப்பிலி
யுந்தானும், மீறவேசமமாகங்கரிப்பான்சாற்றில் வெண்ணெய்போ
ல்சாமமொன்றரைட்டிவாங்கி, யூறுமேநொச்சிச்சார்சாமமொன்று உ
ருள்பாவட்டங்காய்போல்குளிகைகட்டி, தேறுமேயிஞ்சிச்சாற்றே
னுங்கூட்டி திடமாகவுண்டையொன்றுகொடுத்திடாயே ... (௫௱௪)

சுத்திமருந்து.

கொடுத்திடவேசுரகாசஞ்சுவாசகாசங்குத்திருமல்நெட்டிரும
ல்குறுகுறுப்பு, விடுத்திடவேவிஷம்பாய்ந்தாப்போலேயாடும்வி
றடங்கச்சுத்தியுடமருந்துசொல்வேன், தொடுத்திடவேநாவிக்குக்க
றுங்கொச்சாற்றில் சூட்டுவாய்தினமொன்றுபழச்சாறுகொண்டு, ஆடு
த்திடவேநாளொன்றுயிலைதான்சுற்றி அப்பனேதாளகத்தின் சுத்தி
கேளே ... ... ... ... (௫௱௫)

தாளகத்தையரசந்தோல்கியாழத்திட்டு தயவாகமறுதினத்தி
லெடுத்துக்கொண்டு, மீளகத்திலுயிர்க்கெல்லாம்நோயைத்தள்ளி வி
டாதசுரமனைத்துக்கும்விபரங்கேளு, காளகத்தைவனுவிக்கும்கற்பூ
ராதி காயத்திரிமாத்திரையின்கட்டுந்தானும், மீளகத்துக்கற்பூரமிரத
மிக்க கிருபையுடன்சாதிக்காய்சமனாயாட்டே ... (௫௱௬)

ஆட்டியதோர்தூளிடைக்கிரட்டிவாளமப்பனேசேர்த்தந்தக்
குமரிச்சாற்றில், தீட்டியதோர்சாமம்நீயரைத்துவாங்கிச் சிறுகுரு
ந்துபிரமாணமுண்டைகட்டி, நாட்டியதோர்சக்கரையிற்றந்தாயா
னால்நலமானவெட்டுவகைச்சுரமும்போகும், நீட்டியதோருடலறிந்
துகொடுத்தாயானால்நின்றுபோங்கடிகையொன்றுமூன்றுமூன்றே.

வனதிகேசாங்குசம்.

மூன்றுநாழிகைக்குள்ளேசுரங்கள்தீரும் முறையாகப்பத்திய
ங்களிச்சாபத்தியம், ஊன்றுநாழிகைவனதிகேசாங்குசத்தை யுரை
க்கிறேன்ரசந்துத்தம்நாவிநாகம், தூன்றுநாள்மடைதாரம்வாளங்
கெந்திசொர்ணலோகமிரண்டுஞ்சமனாய்ச்சேர்த்து, தான்றுநாளுந்
துமாதாளிச்சாற்றில் தயவாகவேழுபிரவாரமாட்டே...... (௫௱௮)

ஆட்டடாமத்தஞ்சார்மணத்தக்காளியடைவாகமூன்றுபோலேய
ரைத்துஆற்றி, நீட்டியேபொரிகாரமரைத்துவாங்கி நிலைவாகக்குகை
க்குள்ளேதடவிப்பின்பு, ஊட்டியேயுண்டைதனைக் குகைக்குள்ளி
ட்டு வுறவுசேர்வெண்காரமரைத்துமேலும், மூட்டியேதெரியாம
லேமூசிலை முறையாகச்சுற்றியேமண்ணுஞ்செய்யே ... (௫௱௯)

மண்செய்துபாண்டத்திலிடுவேதானும் மைந்தனேதமரிட்டு
வோடுபோட்டு, இன்செய்துஅதின்மேலேமணலைக்கேளு நிறமாக
நாலுவிரற்கடையுமிட்டு, பண்செய்துகுகையதனைமணல்மேல்வைத்

று பாங்காகமேலுமந்தப்பாண்டத்துள்ளே,தண்செய்தமணலதற்
றுமுக்காலிட்டு தயவாகமேல்சட்டிகவிழ்த்திமூடே... ... (௫௭௰)
மூடியேயெண்சாமங்கமலாக்னி மூட்டிநன்றாயாறியபின்க
ல்வத்திட்டு, நாட்டியேகணேசனுக்குப்பூசைசெய்து நம்மாகத்தா
ளாக்கிச்சிமிழில்வைத்து,நீட்டியேநோயறிந்தாருன்றியிடைபூட்டுநி
லைத்துநின்றதிருவகையாய்விஷங்கள்தீரும், விட்டியேயநுபானம்
வெற்றிலையிற்பொதிந்து மென்றுதின்னச்சொல்லங்கே விபாங்கா
சகசன்னிக்கு. [ணே (௫௭௧)
காணப்பாசலக்கழிச்சல்குட்டரோகம் கயச்சுவாசமுமகோத
ரத்துக்கெல்லாம்,பூணப்பாசீனியிலேபுண்ணைச்சொல்லு புகழாக
யிற்றுவலிபியாதிகெல்லாம், தோணப்பாகாட்டாமணக்குநீரில்லா
ற்றவென்றோச்சாரணைநீர் சாத்தைத்தன்று, தோணப்பாதிரிகடுகு
பொடியிலூட்டி சகசன்னிமுதலானதெல்லாம்போமே...(௫௭௨)
போமப்பாவிருசிச்சாறதனிலுண்ணப் பொதுவானதிரிதோ
ஷம்போகும்போகும், வேமப்பாசூலைக்குப்பெருங்காயத்தாட்டு
மேலுமினியநுபானம்வினையமாக, தாமப்பாசெய்திடவேபிணி
பேதமாகும் தயங்காமப்பத்தியமாயிருக்கச்சொல்லு, ஆமப்பாவ
ழிடகுன்மப்நீராமைசுவுசி யப்பனேமகோதரமுந்தீரக்கேளே ( )
மகோதரவுண்டை.
கோளப்பாமகோதரத்துக்குண்டைதனைக் கெட்டியாய்ச்
சொல்லுகிறேனிருப்புகல்லி,நாளப்பாசெய்யபுத்தம்நாகமூன்று
நல்மாகவெய்வெப்நசல்லியாக்கி, நீளப்பாநுவகையொன்றுசல்லி
யொன்று நேராகவிந்துப்புநிமிளைகெந்தி,வாளப்பாமஞ்சிலையுங்
கெவுரிதானும் மாருமலொவ்வொன்றுகழஞ்சுதூக்கே ... (௫௭௪)
தூக்கியேபொடிசெய்துவைத்துக்கொண்டு சொல்லுகிறேன
த்தகட்டையெருக்கம்பாலில்,தாக்குவாயாமூக்குக்குள்ளேநீயும் த
யவாகமூன்றுதினமூறிப்பின்பு, ஆக்கியதோர்முன்தகட்டுப்பொடி
யுங்கூட வமைத்ததற்குமெருக்கம்பால்விறுகவிட்டு,வீக்கியேபழச்
சாறுமளவுக்கால்விட்டு விரவியொருகரகத்திலடைத்திடாயே... ( )
அடைத்ததொருமருந்ததனைரவியில்வைத்து அல்றுடங்கிளை
டவரத்தினத்தானேழு, புடைத்ததொருரவியிட்டு வெந்துநீறிப்
பொன்மெழுகுபோலிருக்குமொன்பதாநாள், உடைத்ததொருவு
ண்டையப்பாசுண்டக்காய்ப்பா லுருட்டியேயுலரவைத்துக்குழலி
லிட்டு,மடைத்ததொருவியாதிக்குவநுபானங்கள் வகைசொல்லே
ன்மைந்தனேகண்டிடாயே ... ... ... (௫௭௫)
கண்டிடாய்வியாதிகண்டவனுபானஞ்சேர்த்துக் கட்டிஞல்தீ
ருமிறவியாதிகேளு, கொண்டிடாய்மகோதரமுஞ் சலக்கோர்வை

குலமழிக்கும்நீராணமைகவுசியாணேபி, உமாமழடாய்வலிகுன்ம மெனி
குன்மந்தானு மகத்தானசந்திருன்மம்வெப்புப்பார்வை, தென்ன
டடாய்கட்டிகுன்ம மெரிவுகுன்மம் திறிகுன்மம்விஷபாகஞ் சேர
ப்போமே ... ... ... ... (௫௭௭)

சலதாரைப்புண்ணை

போமென்றநிசிச்சினங்களாறும்போகப் பூட்டுகிறேன்சலதா
ரைபுண்ணைதன்னை, வேமென்றநாவிகெந்திதமிந்துமென்கெவுரி
பெருங்காயஞ்சவர்க்காரந்துரிசு, ஆமென்றநீர்வாளம்நஞ்சம்போ
க்கியவையெல்லாஞ்சேரவேதூளாயாட்டி, வேமென்றகல்வத்திலப
ழச்சாரால்வார்த்து வெண்ணெய்போலாட்டிநீவாங்குவாங்கே(௫௭௮)
வாங்கியதோர்மருந்ததனைமிளகுபோலேமெனியாக்கிக்குழலி
லேவைத்துக்கொண்டு, வாங்கியதோரனுபானம் வெல்லம்நெய்
யா மூற்றபழச்சாறுகுஞ்சுருக்கிச்சொன்னேன், தேங்கியதோர்வி
யாதிகள்தான் தூலகாயம் திறம்பெரியவயிற்றும்நாயகுவைவெண்ண
ேணை, பாங்கியதோர்பெருவயிறுகெண்டைருன்மம் பாந்துரும்
நீர்க்கோர்வைதிரும்பாரோ ... ... ... (௫௭௯)

சுராங்குசக்குளிகை

பாரப்பாசுராங்குசத்தையுரைக்கக்கேளு பண்பாகப்புறக்கரு
வுமகக்கருவும்போக்கி, பாரப்பாபாடினேன்ரண்டுலட்சம் பாடி
னேனைந்நூறுமென்பத்தைந்தும், பாரப்பாநோயெல்லாம்பதற
றியோடும் பண்டிதற்குயிந்தநூல் பழையதங்கம், பாரப்பாநானுரை
க்கும்யோகசித்தர் பார்த்திருப்பார்பொருளாசைபகரார்காணே()
காணப்பாசூதமொன்றுகெந்தியொன்று கருமத்தம்விரைஎடு
ம் றுசுக்குநாலு, ஊணப்பாதிப்பிலியும்நாலுதூக்கு உலாக்கவதை
த்தூளாக்கியடைத்துக்கொண்டு, புணப்பாருவன்றிப்பிடைபழச்சார்த
ன்னில் புகட்டிடறெவ்விஷசுரம்போம்வியாக்கோரு, சோமப்பாபழ
ச்சாற்றினிஞ்சிச்சாற்றிற் றிவளவாமொவ்வேவேறசாமப்பாண்டே ()
இரண்டாகுஞ்சாமமைகடலேபோலே மொழிமகவேவமயப்டு
த்துலர்த்திலைவத்துக்கொண்டு, இரண்டாளுஞ்சுடுவெந்நீர்தன்னிலூ
ட்ட வெண்சுரமுந்திரிசுரமுஞ்சன்னிபின்னும், மூண்டாமம்விஷசுர
முந்தோஷந்தானு முற்றமுறைநினைச்சுரமு மியாழிப்பிடிப்பாகும்,
அண்டாதசுரமெல்லாமெய்விட்டோட வறைகிறேன்றுத்தச்சத்தா
ன்னமைதானே ... ... ... ... (௫௮௨)

துத்தச்சத்து

ஆண்மையென்றதுத்தமொன்றுதுருசியொன்று அரிதார
தாளெனன்றுசூதமொன்று, வாண்மையென்றகெந்தியொன்று சிலை
தானொன்று, மைந்தவேயிவைசேரத்தூளாயாட்டி தாண்மையெ

ன்றசட்டிக்குள்ளிட்டுப்பின்பு, சாறணையினிலைச்சாறு படிகால்விட்டு
கேண்மையென்றவெண்கலத்திற்கிண்ணியாலேகெற்சிக்கமூடிய
சீலைசெய்யே ... ... ... ... ... (௫அ௩)

சீலைசெய்துமண்செய்துமனைவுமிட்டுதீபாக்கினியாலேநீசா
மமொன்று, சாலைசெய்துவாறியபின்கல்வத்திட்டு தக்காளிச்சாறு
வகைகரண்டுஞ்சேர்த்து, சீலைசெய்துமயனம்போல் வழித்துநீயும்
சிறுபயறுபிரமாணமூண்டைசேர்த்து, காலைசெய்துவனுபானம்
பூரஞ்சூடன் கஸ்தூரிசீரகத்திற்கலந்துவூட்டே ... (௫அ௪)

பாஷாணவுண்டை.

ஊட்டினால்மாறல்போ மூறைக்காச்சல்போ முத்தமனே
தேனிலிடச் சுரமெல்லாப்போ, மாட்டினலண்டாண்டங் கலங்கி
யாடு மறுபத்துநாலுசுரமனைத்துமோடும், காட்டினல்சீதசுரம்
பறந்துவோடும் காட்டடாபாஷாணவுண்டைமார்க்கம், நாட்டி
னல்கெவுரியொன்றுவெள்ளையொன்று நயமாகச்சுண்ணம்புக்கு
ள்ளிவையே ... ... ... ... ... (௫அ௫)

வைத்துநீபொதிந்ததனைவிளாங்காய்போல வஸ்திரத்திற்பொ
திந்துசுற்றிச்சுட்டுநன்றாய், மொய்த்துநீசரிபோக்கிப்பா ஷாண
மெல்லாம் மூறையோடேயெடுத்துமைந்தாகூதமொன்று, மைத்
துநீமூறித்ததனைமத்தஞ்சாற்றில் மைந்தனேசேரவளாசாமமொன்
று, எய்த்துநீபின்பதனில்வாளமொன்று யியலானதிப்பிலிதானொ
ன்றுகூட்டே ... ... ... (௫அ௬)

கூட்டியேமைபோலேஆட்டிவாங்கி கூறுகிறேன்சிறுபயறு
போல்லகட்டி, நாட்டியேயுலர்ந்தபின்புகுளிருங்காச்சல் நயமாக
வோருருண்டைவெந்நீரிலூட்டு, நீட்டியேமூலைப்பாலிலுண்டை
பூட்ட நெறியில்லாச்சுரமெல்லாநீக்கமாகும், பூட்டியேயத்திரியங்க
ளபானுஞ்சோறும் பூர்த்தியாயுண்டுவரப்பொறுக்குந்தானே ()

மூலிகை.

தானென்றபறங்கிமூதல்சூலேபோகச் சாதசமாய்மூலிகை
யைச்சாற்றக்கேளு, வேனென்றபேய்ப்புடல்கொடிவேலிவேரும்
வெள்ளாட்டுப்பாலிலாட்டிவாங்கி, தேனென்றசிறுமூள்ளியளவு
ருட்டித் தினமூன்று ஆவின்பாலுண்ணப்போகும், வானென்றவெ
ள்ளாட்டுப்பாலுமாகும்மைந்தனேதயிருஞ்சோறுண்ணக்கேள்.

மண்டைசூலைக்கு

கேளப்பாமருந்துண்டமூன்றுநாளுங்கெடியானசலத்திலே
யிருக்கச்சொல்லு, வாளப்பாபுளியுப்பைமாற்றவேணும் வாங்கா
சுக்கைக்குவயணங்கேளு, தாளப்பாவிலைவயொன்றுசம்பிரதாயம்

சாதகமாய்ச்சொல்லுகிறேன் சமர்த்தாய்க்கேளு, நாளப்பாயிரத
மொருபணந்தான் தூக்கிநல்மானகெவுரியொருபணந்தான் தூக்கி,
நீளப்பாகடுக்காயுமெட்டுவாங்கு நேரானயொதிப்பட்டைகழஞ்சி
யஞ்சே. ... ... ... ... ... (ரு அக)

அஞ்சானவள்ளித்தோல்கழஞ்சிகால்தா னப்பனேயிவைசேர
த்தூளாயாட்டி, தஞ்சானவெல்லமதில்நேராய்க்கூட்டிச் சாதகமா
யுரலிலிட்டுத்தூளாயாட்டி, மிஞ்சாமல்நாழிகைதான்முப்பதானால்
மெலியெல்லாம்வாரியேசுண்டைக்காய்போல், கஞ்சானகுளிகைக
ட்டிநிழலுலர்த்தி கரகத்தில்வைத்தங்கேமூடுமூடே ... (ரு கூய)

மூடியதோர்குளிகையிலேயஞ்சுவாங்கி முறையாகமூன்றுநா
ள்பதனைக்கூட்டு,நாடியதோர்புளியுப்பைத்தவிர்க்கச்சொல்லு நய
மானவயிற்றிலேதாக்கிற்றானால், நீடினதோர்நெய்யாலும்வெல்லங்
கூட்டி நேரானபருத்தியிலைச்சாறுங்கூட,ஊட்டினதோருள்ளுக்குக்
கொடுக்கத்தீரு முற்றமன்னடைச்சூலைக்கிங்குரைக்கிறேனே (ரு கூக)

உரைக்கிறேன் துளசியிலைகரிப்பான்மேனி யுயர்தாளியிலைக்கா
ட்டுக்கொஞ்சிதாறும், நிரைக்கிறேனிவையெல்லாம் நிழலுலர்த்தி
நேராகத்தூளாகவிடித்துப்பின்பு, துரைக்கிறேன் சூதமொன்றுகழ
ஞ்சுவாங்கிசொல்லுகிறேன்வெற்றிலையால்முறித்துக்கொண்டு,வரை
க்கிறேன்பொடியுடனேகூடச்சேர்த்து மைந்தனேயகல்முழுதுமி
டித்திடாயே ... ... ... ... ... (ரு கூஉ)

இடித்ததொருமருந்ததனைவடிதான்கட்டி யியல்பாகப்புதுகல
சத்திட்டுக்கொண்டு, மடித்ததொருபொடியிலேவெருகடிதான் தூ
க்கி வாகாகச்சலம்விட்டுக்குழைத்துருட்டி, பொடித்ததொருகுளி
கைமூன்றுகவுன்னைப் போகுமப்பாதலைச்சூலைப் புண்கள்தானுங்,
கடித்ததொருபிணியதிகமாயிற்றென்றால் கலந்துண்ணவனுபான
ங்கேட்டக்கேளே ... ... ... ... (ரு கூங)

கட்டானபூசினிக்காய்கியாழமாதல் கடுவிழிச்சாறுதல் பாலி
லாதல்,மட்டானவெல்லமிட்டுக்கொள்ளத்தீரும் மன்னடைநாய்சூ
லைமுசற்கறப்பான்போகும், திட்டானசன்னிக்குக்கியாழஞ்சொல்
லோம் சிறுவழுதலையின்வேர்கழஞ்சிநாலு, தொட்டானசுக்கிரண்டு
சீந்திரண்டு துவளைவிரித்திருநாழிநீரிற்போடே .. (ரு கூச)

சன்னிகியாழம்

போட்டதனைபொட்டொன்றாய்க்குறுக்கிக்கொள்ளப்புகழான ச
ன்னியெல்லாமுறிந்துபோகும், நாட்டமுடனிருமலுக்குக்கியாழ
ஞ்சொல்வோம் நலமானமுத்தங்காய் கழஞ்சுநாலு, நீட்டதனைப்
பேய்ப்புடலுங் கழஞ்சிநாலு நேரானபற்படகங் கழஞ்சிரண்டு,

மூட்டைதனைச்சிந்திரண்டுசுக்கிரண்டு மூன்போமேலயிருநாழிநீரிற் போடே ... ... .. ... (௫௯௫)

நீரிலிட்டுவெட்டொன்றுய்க்குறுக்கிவாங்கி நேராகக்காசளவு நாக்குதாடி,நீரிலிட்டுக்கொண்டவுடன்பேதியாகும் நீராணமொரு ன்ணப்பேதிநிற்கும், நீரிலிட்டவாய்வுமூதலிருமல்போகும் நேரா னவேர்க்கொம்புதிப்பிலியுங்கூட, நீரிலிடக்கரிப்பானுஞ் சமூலம் வாங்கி நேரான சங்கப்வேர்தோட்டேவே... ... (௫௯௬)

தோடையுடன்தேள்கொடுக்கிசிறுதேக்குத்தானும் செப்பமு டனிருநாழிநீரில்போட்டு,எவமூபுடனெட்டொன்றுய்க்குறுக்கிவா ங்கி யிடுபொடியுந்திப்பிலியுமூலமாட்டி, ஆடையுடன்கியாழத்தை க்கொண்டபோது அலத்திருமல்விட்டோடும்மப்பாகேளு, சாடை யுடன் சேர்த்தமேற் கியாழஞ்சொல்வேன் சாதகமாயிலவுங்கமே லத்தானே ... ... ... ... (௫௯௭)

தாமென்றசெஞ்சந்தம்பூலாவிருட்சம் சாதகமாய்ப்பூலாவேர் நீர்த்தாளிவித்து, மாமென்றவிலைமெயல்லாஞ்சமன் துளாட்டிமை ந்தனேயாழாக்குஅளந்துகொண்டு,ஒனென்றஆவினெய்யுமாழாக் குங்கூட்டி யுறவுசெய்துசத்தெடுத்துஉண்டபோது,தேனென்றகு டிம்பெடுத்துநக்கிளுக்கால் தீராதவிருமலெல்லாந்தீருந்தானே ()

தீருமேகிரிச்சினங்களாறுமென்றால் செப்புகிறேன்கியாழத் தைத்திறமாய்க்கேளு, தாருமேகாணச்சாற்கொடுப்பைச்சாறுசாத கமாய் வெந்தசாறுகவாங்கி, தேருமேயிலைவயிரண்டுசமஞய்க்கூட் டி திறமாகக்கால்படிநீருன்ணைச்சொல்லு, தாருமேகல்தெறிக்கும் சலதாரையாகும்,தூர்ந்திடாதசையடைப்புக்கியப்புவேலே ... ()

தசையடைப்புக்கு.

இயப்புவேனிந்நீரில்காரஞ்சேர்க்க விசைவான தசைதெறிக்கு மின்னங்கேளு,இயப்புவேல்கட்டிரத்தமூறித் தூளிநீறுமிறங்குஞ்சிறு நீர்த்தாரைக்கட்டுந்தீரு, மியப்புவோகியாழமொமலறுசிறுதேக்கு மிளகுஎரிசங்கவேர்க்கு கரிப்பான்பத்திரி, இயப்பவேல் தோ டைவேர் கொம்மட்டிவேரு மிலவமொன்றுக்கருசழஞ்சி யிருநா ழிநீரோ ... ... ... ... (௬00)

நீரதனையுழக்காக்கிக் குறுக்கிக்கொள்ள நெந்தடைப்புச்சலய டைப்பநீரடைப்புதீரும், வாரதனைக் கிரிச்சினங்களாறுந்தீரு மற் றொருத்தர்க்கிந்நூலவழங்கிடாதே,போரதனைச்செய்யாதேவாயா டாதே பொய்சொல்லிப்புலையாடித்திரிந்திடாதே, சீரதலைபரியா ரைச்சேர்ந்திடாதே சீஷர்க்கறிந்துகொண்டு நீட்டச்சொல்லு, போரதனையறிந்துவா கடத்தைக்காட்டு பிதற்றிஞல் வாயிமேல போடுபோட ... ... ... (௬0௧)

போட்டவுடன் வணங்கினால்சருவைச்சொல்லு பொய்க்குறி சொல்பண்டிதனைப்போலாகாது, நீட்டமுடன் துணிந்தவர்கள் போலவப்பா நெறிநிற்கப்பாவமில்லையில்லாவிட்டால், நாட்டமு டன்பலபழிகள்சுமதியாகும் நலமறிந்துசொல்வதற்குத்தோஷமி ல்லை, கூட்டவுடனென்றனபெண்ணைப்போலே கூடுமப்பாசீஷவ ர்க்கங்கூடுந்தானே  இராசகுலைக்கு  (௯௰௨)

கூடிநின்றசரீரத்தில்ரசகுலைமுறிக்கக் கூடுகிறசுரைக்குடுக்கை க்கரியவாங்கி,நீடிநின்றபழமோரிற்கரைத்துக்கொள்ள நீங்காதரசங் கழன்றுநீருப்பாகும், நாடிநின்றரத்தபித்தம்போகவென்றால் நற்குன்றிவெட்பாலாமருக்காரைவரும், ஓடிநின்றமொசுமொசுக் கைசிறுகிளாவேரு முப்பிலிவேருடன்திருநாப்பாலைவேரே ...( )

சுராங்குசம்

பாலையுடன்மிளகுகடுகொன்றாய்க்கூட்டிப் பரிவாகவாட்டு நெய்யிலெண்ணெய்விட்டு, ஆலையுடனடுப்பேற்றியெரித்துவாங்கு அப்பனேரத்தபித்தமனைத்தும்போகு, மாலையுடன்சுராங்குசத்தை ச்சொல்லக்கேளு வளர்குதம்விழிகஞ்சாவசுவாசநோயாய், சோலையு டன்தூதளையின்சாற்றாலாட்டித் துவரைபோல்குளிகைகட்டிவைத் திடாயே ... ... ... ... ... (௯௰௪)

வைத்ததொருகுளிகையொன்று யிஞ்சிச்சாற்றில் மைந்தனே குளிர்மாறல்வெண்சுரம்போம்,வைத்ததொருகிரிச்சினத்துக்கின்னே ஞ்சொல்வேன் மண்ணில்வளர்பூநாகமெழுமிச்சங்காயளவு, வைத் ததொருபாலிலேகரைத்துக்கொள்ள மகத்தானகல்லடைப்புத்தெ றித்துப்போகும், வைத்ததொருமுட்டையிலே பாக்களவரைத்து மருவியதோரெண்ணெயிலேகொடுத்திடாயே ...(௯௰௫)

கிரிச்சினங்கட்கு

கொடுத்திடவேதீரடைப்புத்தீருங்கண்டாய் கூறுகிறேன்கொ ள்ளுச்சாற்வாங்கிக்கொண்டு, கொடுத்திடவேயரிசியிட்டுக்கஞ்சிகாச் சி கொடுத்தவுடன்நீர்சிறுப்புக்குணமாய்க்காணும், கொடுத்திடவே மாவிலிங்கவட்டேவொன்று கூறனெரிஞ்சிவேர்போராமுட்டிவே ரும்,கொடுத்திடவேசிறுபூளைவேருங்கூட கூட்டியொன்றாய்நீரிலெ ட்டொன்றாய்க்காச்சே ... ... ... (௯௰௬)

காச்சிவடித்துண்டிடவேயானைமுதல்நழுவும் கல்தெறிப்புநீர் க்கடுப்புக்கரையவென்றால்,காச்சிவடித்திருந்தபழங்கஞ்சிக்குள்ளே கடுநெல்விமுள்ளியொருபலந்தானிட்டுச்,காச்சினறுந்தாழையுடவி ழுதிச்சாறும் கலந்தரைத்துவெட்டுநாளுண்ணக்கேளு, காச்சலறு நீர்க்கடுப்பு மடைப்புத்தீரும் கடும்புழுகுபணவிடைதான் தூக்கு தூக்கே ... ... ... ... (௯௰௭)

தூக்கியிளவெந்நீரில்போட்டுக்கொள்ள துளிவிழுதல்பொசி
ந்தூரல்துறந்துபோகும்,தாக்கியேயிருமலமுமடைந்துதாளுற்சா
ற்றுகின்றனிருமலத்தின்தாரைதன்னை,தேக்கியேதிருக்கள்ளிப்பாலா
மூக்குசிற்றாமணக்கெண்ணெயாமாக்கப்பா, நோக்கியேஆவினெ
ய்தான்படியாமாக்கு சேராமல்பாண்டத்திலூற்றூற்றே ... ()

ஊற்றியேநிலப்பனைவேர்வெள்ளையுள்ளி யுத்தமெனபெருங்
காயமஞ்சளோடு,நேத்தியேயொவ்வொன்றுஅரைப்பலமாயாட்டி
லேகித்துப்பதமாகவடித்துநீயு,மாத்தியேயொண்டுகாசிடைதானக்க
வப்பனேமலதாரைதிறக்கும்பின்னும், போத்தியேபால்கழஞ்சிக்
கொள்ளவேணும் பொழுதுபுகில்பருப்பிட்டுக்கழஞ்சிவைமே ()

நீரடைப்புக்கு

கஞ்சிகொள்ளநீரடைப்புவெளியாலப்போகும் காட்டாதே
யிந்நூலைகள்ளர்கையில், அஞ்சியேநடப்பவர்போல்கிரக்குமட்டு
மடிதொழுவார்நூல்கிட்டிலகந்தைசெய்வார்,மிஞ்சியேயெழுநாகி
லுடையோரப்பாவெறும்வீணரவர்க்கொன்றும்விள்ளவேண்டாம்
பஞ்சியேபோவென்றுதள்ளிவிட்டு பாரப்பாபராபரத்தைப்பற்றி
ப்பாரே நீர்கரப்புக்கு (௯௱௰)

பாரப்பாவிப்படியேகஞ்சிகொண்டு பத்தியமாய்மருநாளை
க்கன்னமுன்னணில்,நேரப்பாநீரோடுமின்னமொன்று நிகழ்த்துவே
னீருள்ளியிந்துவோடு, தாரப்பாபழம்புளியும்சமனாய்க்கூட்டி சா
தகமாயறுதிங்கள்சென்றகாடி, வாரப்பாகலக்கிநீயுண்ணச்சொல்லு
மருவியதோர்பத்தியத்தைவழங்குவேனே ... (௯௱௰௧)

வழங்கியதோர்பச்சரிசியறுஞ்சமனாய் மைந்தனேபால்க
ஞ்சிகுடிக்கச்சொல்லு, விளங்கியதோர்வெண்சாவல்குடலீரலடை
த்து வெண்பசுவின்பாலிலேகொள்ளப்போகும், புழங்கியதோர்
வாய்பேசாதுண்மைவேணும்பூட்டக்கேள்நறுந்தாளிச்சாறுவாங்கி
அழகியதோர்குறுவைநெல்லரிசிகூட்டி யாட்டியேவெல்லமொடு
ஆட்டுநெய்யே கல்லடைப்புக்கு (௯௱௰௨)

நெய்விட்டுக்கிளறியேதின்னும்போது நேராககல்லடைப்பு
வீக்கநீங்கும்,நெய்விட்டுப்பலகரையின்சாம்பல்வாங்கி நிம்பச்சா
ர்குழப்பியுண்ணில்நீர்தாரையாகும், நெய்விட்டுஆவின்பால்சங்கங்
குப்பி நேராகவுண்டடவேசிறுப்புவாங்கும்,நெய்விட்டுஆட்டுத்தா
ம்பொட்டிதன்னை நேரானதண்டிலேபொதியப்போடே (௯௱௰௩)

வல்லாரைசூரணம்

போட்டங்கேகழுத்தளவுசலத்தில்நிற்கப் போகாதகல்லடைப்
புப்புழுங்கிவிழும்,நீட்டக்கேள்புனல்புருங்கைநசேருரிவேருந்நே
ரானஆவரைவேரமுக்கிரூவேர்,நாட்டக்கேளுநீதமுதாளிவேரும் ந

லமாகவாட்டியேவிளக்கெண்ணெய்குத்தி, பூட்டக்கேள்குழப்பிறக
கலிக்கந்தாகமும் பொருமலொழிகல்லடைப்புபுகழ்ந்துபோமே( )
போமப்பாஐவரலிமேஹசியம்நேராய்ப் புகழ்மேனிச்சாற்றி
லுண்ணைப் பொழியும்நீர்தான், வாமப்பாசின்னிச்சார் நாவல்பட்
டை வளமாகவதின்கொட்டைப்பருப்புங்கூட, வேமப்பாசமபாக
மரைத்துவாங்கி வெள்ளாட்டின்பாலில்லயுண்ணைப்போகும், ஆம
ப்பாவல்லாரைச்சூரணங்கேளு அப்பனேமேகமென்றதனைத்தும்
போமே ... ... ... ... (௯௱௰௫)

அனைத்தும்போம்வல்லாரைசமூலம்வாங்கி யப்பனேநிழலு
லர்த்திச்சூரணித்து, அனைத்தும்போம்நெய்யிலுண்ண மேகமெல்
லா மாச்சரியம் நிலக்குமிழ்வேரிடித்துநன்றாய் அனைத்தும்போம்
நீரிலிட்டொன்றாய்க்கொள்ள யடைத்திருந்தகல்லுமிழுமப்பாகே
ளு, அனைத்தும்போம்நாய்ப்பாகல்நத்தைச்சூரி யடைவுகருஞ்சீர
கமும்சலத்தின்கூட்டே ... ... (௯௱௰௬)

கூட்டியேயெட்டொன்றாய்க்கொள்ளக்கேளு கூட்டோடே
கல்தெறித்துக்குமிறிவிழும், நாட்டியேமூன்றுதினமுண்ணத்தீரும்
நலமானகொடிப்பைச்சாற்றேநாச்சிச்சாறு, மூட்டியேவலைக்குழக்
குக்கலந்துகொள்ள உடன்தீரும்கல்லடைப்புச்சதையடைப்பு, நீட்
டியேபிறமேகமிரண்டுந்தும்போக நிகழ்த்துகிறேன்மகாமேகக்
குடோரிதானே மகாமேகக்குடோரி (௯௱௰௭)

தானென்றகாரியமிலுப்பைநெய்யில் தனித்தனியேயப்பூநீ
ரமுருக்கிச்சாய்க்கத், தானென்றகண்டங்கத்திரியின்சாற்றால் சாதக
மாயெடுத்ததனைச்சட்டியிலிட்டு, தானென்றநாயுருவி சிவந்ததாகச
ட்டிக்குளிட்டுநீவறுக்கும்போது, தானென்றகரண்டிகொண்டுகிண்
டிக்கிண்டிசரசமாய்ச்செந்தூரமானபின்பு, தானென்றசெந்தூர
ங்குழவிவிட்டு சாப்பிட்டால்மேகத்திகுடோரிதானே (௯௱௰௮)

குடோரியென்றசெந்தூரபற்பந்தன்னை கூறக்கேள்பணமூ
ன்றுநெய்யில்கொள்ள, குடோரியென்றகுக்கிலத்தில்மேகம்போ
கும் கூறுணத்தனிலிடச்சலமேகம்போம், குடோரியென்றகீழ்கா
யின்சாற்றிலூட்ட கொத்தோடேசுரோணிதமேகந்தீரும். குடோரி
யென்றரத்தமேகத்தைப்போக்கும் குறுவாழைத்தண்டுநீர்தன்னி
லூட்டே ... ... ... (௯௱௰௯)

ஊட்டடாசிறுபூளைச்சாற்றில்நீயு முத்தமனேகல்லெரிப்புத்
தீருந்தீரும், நாட்டடாவிஞ்சிச்சாற்றிசுரம்போகும் நலமானமே
னிச்சாற்றன்னிலூட்ட, வாட்டடாவறுசன்னிவாதம்போகுமைந்த
னேவெற்றிலைச்சாற் கிரூப்புகூட்டி, நீட்டடாபித்தசுரம் வெருவி
யோடும் நெருப்பதாபசுரந்தனக்குக்கேளே ... (௯௱௨௰)

ங்களைப்பாயிளநீரைச்சேர்த்துக்கிவந்து கொடியாகநீரிலிடுபித்தவு
ரம்போகும், வாளைப்பாபழச்சாற்றிலூட்டிலூட்டு வாகாகநீரிழிவு
போகவென்றால், வேளைப்பாவதினியொடுவிளாம்பிசினும்நேராய்
விரயுவாய்தனிலே பொடிதான்ரண்டு, நாளைப்பாவேழுதினமுன்
னைத்தீரும் நலமாககிரிச்சினங்கள்போகத்தானே ... (௩௨௧)

கிரிச்சினங்கள்போகவென்றால்முசுட்டைவித்து கொடியாக
நெருஞ்சிவித்தாவாரைவித்து,கிரிச்சினங்கள்போகவேவகைக்குழக்
கக கொடியாகவிளாம்பிசினும்கழஞ்சிவெட்டு, கிரிச்சினங்கள்போ
கவேயபினிறு ஆளுக்கேளப்பாயுலர்த்திநன்றாய்த்தூளாயாட்டி,கிரிச்சி
னங்கள்போகவே வெருகடிதான்தேனில் கொடியாகச்செந்தூரம்
பொன்பிடிதான்போமே ... ... (௩௨௨)

நீரிழிவுக்குயெண்ணெய்

போட்டிடுவாயட்டதினை நீரிழிவுதீரும் புகழான நீரிழிவுக்கெ
ண்ணெய்கேளு, நாட்டிடுவாய்சூதமொருகழஞ்சேபத்து நலமான
கெந்தகமுங்கழஞ்சிபத்து, ஆட்டிடுவாய்வெற்றிலையையிதற்கிரட்
டியப்பனே பேழைபோற்குலைதான்கட்டி, நீட்டிடுவாய்குகைக்கு
ள்ளே கெந்திசூதம் நேராகவைத்துநீமூடிமூடே ... (௩௨௩)

மூட்டியேகுகைகட்டிவெற்றிலையையிட்டு முழங்கவேயிருநா
றுபாத்திகட்டி, நாட்டியேபொதித்துகட்டியதின்மேல்கேளு நல
மானவாழையிலையிருநூறு பொதிந்து, நீட்டியேயிளவைகட்டுசுத்தி
வைத்துநெருக்கிநார்கட்டிபொருகுழிகெல்லிநீயும், ஊட்டியேகு
ழிக்குள்ளேபுளிப்புரோணியுத்தமனேயிரஞ்சுமரக்கால்கொட்டே

கொட்டியேயதின்மேலேயிலைபொதியைவைத்துகுவித்திடா
யதின்மேலேசிராப்புராணி,கொட்டியேயனவிட்டுவெந்துநிற்கு
ம் குவியநீதெரியாமல்மண்ணைமூடி,கொட்டியேமூன்றுதினங்கழி
ந்தபின்பு,கூட்டடாமருந்தெடுத்துக்கல்வத்திட்டு, கொட்டியேதூ
ளாக்கிக்குழவியிலிட்டு கூறகேள்செந்தூரங்குணத்தைக்கேளே ( )

குணங்கேளுமதுமேகம்பித்தமேகம் கூறானவாயுவுடன்கொ
டியமேகம், இனங்கேளுவெள்ளைநீர்த்திறைந்துபோகும் செய்யவுறு
கிரிச்சினந்தானீரகங்கேளு,மனங்கேளுமத்தித்தோலாவாரந்தோ
லுமரத்தமேனவொதியமாட்டட்டைதானும், சணங்கேளுசமபாக
மூலத்திநீயும் அரிக்கநன்றாய்ப்பொடியாக்கித்தேனிற்கொள்ளே( )

நீரிறங்க

வெள்ளைக்கேளிகிரிச்சினங்கள்போகும்போகும் கூணமன்றி
நீரிறங்கக்கேளுகேளு, வின்னகேள்மாம்பட்டையாவரையின்பட்
டை கென்வேல்தாலவெப்பந்தோலிவை நேராய்,அள்ளக்கேளி
டித்துவொருபாண்டத்திட்டு ஆப்புனேசலம்விட்டு ஊறவைத்து,

ஞுள்ளக்கேள்குறுக்கிதின மூழக்கருந்த துயர்திரு மேகாதிசூரணத்
தைப்பாரே ... ... ... ... (௩௨௭)

மேகாதிசூரணம்

பாரப்பாமுந்திரிகைபேரீச்சம்பழமும் பருநெல்லியதிமது
ரமேலங்கள்ஞர்,நேரப்பாதிப்பிலியுஞ்சிறுபூளைவேரும்நேரானசந்
தனமுங்கொத்தமல்லி, வேரப்பாவெள்ளரியின் வித்துங்கூட்ட மீ
றுமலசமபாகஞ்சூரணித்து, வாரப்பாவெருகடிதான்கழுநீரிற்கொ
ள்ள மைந்தனேகடுப்பெரிவுகிரிச்சினங்கள்தீரும், ஆரப்பாவறிந்து
செய்வோர்சித்தர்முத்தரப்பனேமற்றோர்களுக்குத்தெரிந்திடாதே ()

வங்கபற்பம்

தெரிந்திடவேகுன்மங்கள்சிதறியோடச் செப்புவேன் வங்கப
ற்பம்திறமாய்க்கேளு,அரிந்திடாய்த்தகடுகொண்டுவங்கந்தன்னை ய
ப்பனே சட்டியொன்றி லனைவாசியுப்பை, சொரிந்திடாயதின்மே
லேதகடுவைத்து சேரவந்தச் சட்டிமெம்பவுப்புமிட்டு, வருந்திடா
மேல்சட்டிகவிழ்த்துமூடி மைந்தனேநாற்சாமமெரித்திடாயே ()
எரிந்தாறியெடுத்துப்பார் வங்கபற்ப மென்மகனே ரண்டுப
ணந்தன்னைவாங்கி, யெறிந்தாறுச் சக்கரையில்குழப்பியுண்ண வெ
ட்டுவகைகுன்மங்களெல்லாந்தீரு, மெரிந்தாறுநோய்க்கெல்லா மி
ப்படியேயிட்டுயிட்டுவரவங்கபற்பமின்னங்கேளு,எரிந்தாறுநோ
யனைத்துமுசிதமிந்த யியல்புகேளதில்கண்ணிபிடுங்கிடாயே (௩௨௯)
பிடுங்கியொரு சட்டியிலே கழுவிக்கொண்டு பேராகத்தாழி
க்குள்பாதியிட்டு, நெருங்கியேஇரண்டுபலம்வங்கம்வைத்து நேரா
கவதின்மேலுமதில்கண்ணியிட்டு, நடுங்கியதோர்சட்டியினாற்கவிழ்
த்துமூடி ராப்பகலாயெண்சாம மூத்தியிட்டு, மடுங்கியேயாறவிட்
டெடுத்துப்பாரு மைந்தனேவங்கமதுபற்பமாமே ... (௩௩௧)
ஆமப்பா பற்பத்தில் பணந்தானொன்று ஆவினெய்யிற்கொ
ண்டிடவேதீருநோய்கே, ளாமப்பாவெலும்புருக்கி வெள்ளைவீ
ழ்த லுடல்காந்தல் கடுப்புகிரிச்சினங்கள்தீரும், வேமப்பாசலக்கழி
ச்சல் காமாலைபாண்டு வெங்கனலில்பஞ்சுபோல் வேகும்வேகும்,
நாமப்பாமருந்தெல்லா முள்ளபடி சொன்னோம் நாதாக்களிக்கரு
வைமறைத்திட்டாரே... ... ... ...(௩௩௨)

அப்பிரகசெந்தூரம்

மறைபோற்றுமப்பிரக செந்தூரத்தை வயணமாய்ச் சொல்
லுகிறேன் மச்சகேந்திரா,நிறைபோற்றுமப்பிரகமிடித்துவாங்கிநே
ராகப்பாண்டத்திலிட்டுநீயும், நறைபோலுங்கலசத்தி லராசு அத்திந
லமானஆலம்பட்டை விளைகள்நேராய், துறைபோக்கியிடித்துநீக
ல்முப்பிட்டுக் குமட்டியே கழுவியதைப்பறவையே ... (௩௩௩)

ஊறியதோர்நீர்பிழிந் தஅப்பிரகமாட்டி யுத்தமனேயெருக்
கிலையைப்பாத்திநன்றாய், மீறியதோரடைவைத்து வுலர்ந்தபின்பு
வீதியிலேயெருக்கவித்து அடையவைத்து, மாறியதோரடைமே
லே யெருவுங்கொண்டு மைந்தனேவற்காலிப் புடத்தைப்போடு,
தேறியதோரப்படியேயிருபத்தொன்று திறத்திலேவப்பிரகஞ்செ
ந்தூரமாமே ... ... ... (௯௯௪)

செந்தூர மெடுத்துநீ சலத்திற்போட சீக்கிரத்தில் தளர்ந்து
போமிதந்திடாது, செந்தூரம் பணவிடைதான் தேனில்கொள்ள
தீராதநீரிழிவு தீருந்தீருந், செந்தூர முண்டிடவே கிரிச்சினங்கள்
செப்பரியக்ஷயந்தீருங்குன்மந்தீரும், செந்தூரமுண்டிடநோயெ
ல்லாந்தீரும் சிவசிவாவப்பிரகந்தெளிந்தபோக்கே ... (௯௯௫)

பிறமேகத்துக்கு

போக்கான பிறமேக மொழியக்கேளு பூட்டும்வெளீருள்ளிப
ழச்சாற்வெல்லம், தாக்கான சமபாகம் பனியில்வைத்து தான்பிழி
ந்துசாப்பிடவே தணிந்துபோகும், தேக்கானவப்பிரக மின்னஞ்
சொல்வேன் திருமாலி னப்பிரக மெடுத்துவந்து, வாக்கானவெள்
ளாட்டுநீரில்வெந்து மைந்தனேமறுபடியுமாட்டக்கேளே (௯௯௬)

மாட்டக்கேள்சுண்ணாம்புதண்ணீர்க்குள்ளே வாகானகோநீரி
லவித்துக்கொண்டு, நாட்டக்கேள்சலம்விட்டுகழுவிப்போட்டுநன்
றாகவிதழிதழா யெடுத்துக்கொண்டு, பூட்டாகப் புதுசீலைக்குள்ளே
வைத்து புகழாகப் பருநெல்லுங்கூடக்கூட்டி, மூட்டக்கேள் கிழி
கட்டி சட்டிலிட்டு முத்துப்போல் தெளிக்காடி மட்டாய்வாரே ()

வார்த்துநன்றாய் பிசைந்திடவப்பிரகம்கரைந்து மண்டிபோ
லகீழ்நிற்குந் தெளிந்திறுத்து, வார்த்துநன்றாயுலர்ந்தபின்பு ஆலம்
பாலும் வளராலம் விழுதுமதின் மிதழுங்கூட, வார்த்துநன்றாய்
மயனப்போ லாட்டிவாங்கி மைந்தனே யின்னமுங்கேள் நினைவா
ய்நீதான், வார்த்துநன்று யாவிலையில் பழுப்புவாங்கி மடக்கொன்
றில் மருந்தப்பிமடக்கால்மூடே... ... ...(௯௯௮)

மூடியே சீலைசெய்துமண்ணுஞ்செய்து முசியாதேகசபுடத்
திற்போட்டுவாங்கு, நாடியே மூன்றுதிர மிரட்டையிலையிட்டு நய
மாகவாறுதிர மிப்படியேபோடு, நீடியே கற்றாழைச் சாற்றாலாட்
டி நேராகமூன்றுதிரம் புடத்தைப்போடு, தேடியே யொரிலைத்
தாமரையின்சாற்றால் சிறக்கவே மூன்றுதிரம் புடத்தைப்போடே

போட்டதொருவப்பிரகமெடுத்துப்பின்னும் பொரவெள்
ளையாட்டுநீர்தன்னிலிட்டு, மூட்டதொரு கையாலேபிசைந்துநீயு
முழுங்கவே கொடுப்பதனைச் சமூலப் வாங்கி, கூட்டதொருகுழாக்

கரிந்துசட்டியிட்டு குறையன்றிமுச்சாமமெரிக்கப்பற்பம், தீட்டி
தொருநாவல்தோலத்தித்தோலுஞ்சிறப்பானவரசந்தோலத்தித்தோலே
தோல்சமனாய்ப்பொருக்கெல்லாஞ்சீவிப்போட்டுதுண்டுது
ண்டாய்நறுக்கியேசன்னமாட்டித், தோலசமனாய்நாற்குருணிநீரில்
போட்டு சுழலவேயாறியபின்றெலான்றுக்கி தோல்சமனாய் வெந்
தசலமப்பிரகத்தாற்றிதாளாட்டிவில்லைகட்டிபுலரவைத்து, தோல்ச
மனாய்க்கெசபுடந்தான்போடுபோடு சோறுபோல்கோலரக்கு இ
யாழம்வையே ... ... ... (௬௪௧)

கோலரக்குகியாழத்தால்புடந்தான்பத்து குமட்டியேவெந்
தபின்புசீனிவாலைமு, பாலரக்குப்பழந்தேன்பால்நெய்யுஞ்சம்நே
ராய் புகட்டியநிற்செந்தூரம்பிசைந்துவைத்து, காலரக்குச்சட்டி
யிட்டுஅடுப்பிலேற்றிக் கனகம்போல்பதம்வந்தாலாற்றிவைத்து,பா
லரக்கும்பதமேதுசலந்தான்வற்றிப் பழமெல்லாங்காணமல்நெய்
பதமாந்தானே ... ... ... (௬௪௨)

நெய்பதமாய்நிற்கையில்செந்தூரமாகும் நேராகவாறியபி
ன்வைத்துநீயும்,மெய்பதமாயனுபானம்சுரத்துக்கெல்லாம்மீராம
ல்சீனியிலேயளவாவூட்டு, செய்பதமாய்தாபசுரம் போகவென்று
ல் செப்புகிறேன்சுக்குத்தூள் பணந்தான்வாங்கி, கைபதமாய்செ
ந்தூரமளவாவூட்டுகடுஞ்சுரங்கள்சன்னிக்கு முருங்கைத்தோலே ()

முருங்கைத்தோல்கியாழத்தா லளவாவூட்டு மூர்ச்சையறுந்
தோஷசுரவனைத்துந்தீரும், முருங்கைத்தோல்பத்தியங்கேள்வெள்
ளாட்டுப்பாலில் மொழிகுறுநெய்யிட்டங்கேகஞ்சிகாச்சி, முருங்
கைத்தோல்பணவெல்லம்கழஞ்சியிட்டு மொழுமொலனவேர்க்க
வேகொடுக்கச்சொல்லு, முருங்கைத்தோலுதரத்திலவியாதிக்கெல்
லாம் மூன்றுநாள்தேனிலேகுன்றியூட்டே ... (௬௪௩)

ஊட்டுவாயிரண்டுமாச்செந்தூரம்வாங்கி வுய்த்தநொச்சிச்சா
ற்றிலிடுஅஷ்டகுன்மம்போகும்,நாட்டுவாயுதரத்திற்கட்டிபோக நு
றுநெய்யைச்சேர்த்துநீயுண்ணச்சொல்லு, நீட்டுவாய்நீரிழிவுபோ
கவென்றால்நிறுத்தொருமாச்செந்தூரந்தேனிலூட்டு,மாட்டுவாய்க்
காயாசுவாசம்போக மைந்தனே செந்தூரங்காணிபோடே (௬௪௫)

காணியிடு நெய்யிலேக்ஷயரோகம்போம் காயாசுவாசம்போ
ம்வறட்சிம்போகும்,கோணியிடுவலிகுன்மம்போகவென்றால் கொட்
டமுருங்கைத்தோல்சாற்றிலுள்ளே, பூணியிடுசத்திகுன்மம்நீக்க
வென்றால் புத்தமேனைசுக்குவெந்தசலத்திலுள்ளே,பேணியிடுசெந்
தூரமிருமாநீயும் பெருனாரசபற்பம்கூட்டுகூட்டே (௬௪௬)

கூட்டையிலேபேதிமெத்தவுண்டாச்சென்றால் கூறுவேன்காந்
தசெந்தூரத்தோடு, ஊட்டையிலேசூதசெந்தூரந்தானு மோமொரு

ன்றுபணத்துக்குமப்பிரகமலாமா, நீட்டையிலேஅஷ்டகுன்மம்
பறந்துபோகும்நேராகப்பத்தியத்தைநீகேளப்பா,நாட்டையிலே
பிரமகுலத்துதித்தோராகில் நலமானதுவலாதுதளங்காயாமே ()

### லோகசெந்தூரம்

ஆமப்பாமாங்கிஷிந்தான்றின்றபேர்க்கு ஆட்டுவற்றல்முசல்க
ரியும்நீர்மோராகும், வேமப்பாவுடப்புமெத்தமெலிந்திருந்தால்
வெண்ணெய்திண்ணச்சொல்லுவாய்வேறுகேளு, சாமப்பாசலக்க
ழிச்சலனைத்தும்பாகச் சாற்றுகிறேன்லோகமுற்ற செந்தூரந்தன்
னை, நாமப்பாகண்டபடிசுருக்கக்கேளு நலபழச்சாற்றிலேபொ
டியைப்போடே ... ... ... (கூசஅ)

போட்டதனைக்கழுவியேரவியிற்போடு புகழாகவுலர்ந்தபின்பு
நாவல்பட்டை, யாட்டதனைப்பிழிந்திந்தஅளைப்பொடியிற்சேர்த்
து அப்பனேசுவறுமட்டுமேரவியிற்போடு, நாட்டதனைமூன்றுதிரமி
ப்படியேசெய்ய நலமானசெந்தூரமாகுப்பாரு,கூட்டதனையாவ
ரையில் விரைத்தூளாட்டி கோதன்றிச்சீலைவடிகொண்டிடாயே ()

வடிகொண்டதூளதனில் விராகன்மூன்று மகத்தானசெந்தூர
ம்பணந்தான்மூன்று,வடிகொண்டதேனிலேயுடுகியாழத்தாட்டுமை
ந்தமேனியாழத்தின்மருந்தைக்கேளு, வடிகொண்டகழல்மணியும்
வெள்ளுள்ளிக்கடுக்காய் வசம்புகோடமூனுடனேசுக்கோடாறும்,வ
டிகொண்டவெட்டொன்றாய்க்கொள்ளச்சொல்லு வைமந்தனேசூர
ணமாக்கியாழங்கேளே ... ... ... (கூருய)

கேளப்பாசலச்சழிச்சலைத்துப்போகும் கொடியானகடலி
றஞ்சிப்பட்டைதானும், நாளப்பாபலமூன்றேமுக்காலாகும் நல
மானஆவரைத்தோல்மூன்றேமுக்கால், நீளப்பாபலமஞ்சகருங்கா
லிபட்டை நோஞ்சுபலங்கட்டுக்கொடிசமூலந்,தாளப்பாகடுக்காய்
தான்பலப்நாலாகும்தான்றிக்காய்பதினஞ்சுதகர்த்துவாங்கே ()

தகர்த்திடுவாயிரண்டரைதான்பலந்தானப்பா சாதிக்காயிலவ
ங்கேசரத்தூளாயாட்டி, தகர்த்திடுவாயிருநாழிசலத்திற்காச்சிசார்வாக
வெட்டொன்றாய்குறுக்கிநன்றாய், தகர்த்திடுவாயிரண்டுகுத்துச்சூர
ணத்தை சாப்பிடவேயிருநேரமசனேயலே,தகர்த்திடுமேசலக்கழி
ச்சல்மாறுமாறுந் தலைமுழுகத்தயிலமொன்றுசாற்றக்கேளே ()

### மதுராதித்தயிலம்

சாற்றக்கேள்மதுராதித்தயிலமொன்றுதபோதனர்களாராய்ந்
துசாபர்த்தித்து,சாற்றக்கேள்சிறுநீளாபொன்றுங்காணி தளிராவ
ரையிலையுந்தாமரையிலையும்,சாற்றக்கேள்பூடத்தாழைவிழுது
ங்கூடசமபாகமிடித்ததனைப்பதக்குநீரில்,சாற்றக்கேள்நாலொன்று
ய்க்குறுக்கிவாங்கி நயிர்ப்பாலேபிழிந்துவைத்துப்பின்னுங்கேளே.

கேளப்பாவெட்டிவேர் பலமஞ்சாகும் கெடியாகுமிலாமிச்சம்பலமஞ்சாகும்.நாளப்பாசந்தனமும்பலமுமஞ்சாம் நலமானரண்டுபலம்செங்கழுநீர்மூலம்,தாளப்பாவிவையெல்லாஞ் செவ்விளநீர்விட்டுச்சாதகமாமயனம்போலாட்டிவாங்கி, நீளப்பாமுக்குறுணிசலத்திற்சேர்த்து நெருப்பெரித்துவெட்டொன்றாய்க்குறுக்கிவாங்கே ... ... ... ... (௬௫௪)

வாங்கியேமுந்திவைத்தகியாழத்தாட்டி மைந்தனேமேல்மருந்தைமாட்டக்கேளு,பாங்கியேயிலவுங்கமேலங்கோட்டம்,ருமதுரம்செண்பகப்பூசாதிபத்திரி,தாங்கியேமஞ்சிட்டிநாகங்கல்லுர் சாதிக்காய்சடாமாஞ்சிகிரும்பு,சீரமோங்கியேமாஞ்சிகையுங் கூகைநீறு முத்தமன்னவகையொன்றாகமஞ்சியொன்றே .. (௬௫௫)

ஒன்றாகமருந்தெல்லாமாட்டிவாங்கியுருகவேமுன்வைத்தகியாழத்தாட்டி நன்றாகநல்லெண்ணெய்ப்படியும்விட்டுநாயகற்குப்பூசைசெய்துவடித்துப்பின்பு,குன்றுகுங்கற்பூரம்புழுகுசட்டம்கோரோசனையிரண்டுபணந்தான்சேர்த்து, பொன்றுகுந்தயிலமிட்டுநீயக்காய்தேய்த்துப் புகழாகமுழுகிவரப்புதுமைகேளே (௬௫௬)

புதுமையென்றமேகங்களிரண்டுபத்தும்பொறிவிழுந்தகருமருந்தும்பாலவேகும்,புதுமையென்றவுருவம்போல்வாகடங்கள் பண்டிதர்களறியாமல்பழியைக்கொண்டார், கதுமையென்றதொழிலெல்லாம்சூத்திரத்தில்சொன்னேன் கண்கெட்டகுருடருக்குக்காணலாகும்,கொதுமையென்றநாகபூபதியைக்கேளு கோடனகோடிபிணிதீருந்தானே ... ... ...(௬௫௭)

நாகபூபதி

தானென்றதாம்பிரம்பலந்தான்ரண்டு தகடுவெகுலேசாகத்தட்டிவாங்கி, தானென்றபுளியிலைச்சாற்றுக்குள்போட்டு சாதகமாய்கொதிப்பித்துயெடுத்துக்கொண்டு, தானென்றகெந்திரண்டுபலந்தான்வாங்கி சாதகமாயெருக்கம்பால்விட்டுஆட்டு,தானென்றதகட்டிலிருபுறமும்பூசி தளரவெயிலுலர்த்தியேதிரும்பவாங்கே ()

வாங்கியேதகடுதன்னைச்சிறுசட்டிக்குள் மாட்டியொருமேல்சட்டிகொண்டுமூடி,தாங்கியந்தச்சட்டிக்குள்சீலைசெய்துசாதகமாய்மண்செய்துயிருசாமமட்டும், தேங்கியந்தவெருவடுக்கிச்சட்டிவைத்து திரும்பவொருமுழவுயரமெருவடுக்கி,பாங்கியந்தஅனலூட்டியெரித்துஆறில் பார்மகனேசெந்தூரம்பற்பமாமே (௬௫௯)

பற்பமெத்ததாம்பிரத்தைத்தூளாயாட்டி பாச்சடாசமபாகஞ்சூதங்கெந்தி, அற்பமென்றுநினையாதேசெருப்படிசாறுவிட்டு ஆட்டியேகுகையிலிட்டுமண்ணுஞ்செய்து, சிற்பமென்றமுன்போலேபுடத்தைப்போடு சிவசிவாயாறவிட்டெடுத்துப்பின்பு, சொற்

பமெனச்சேறுமொட்டிலொன்றுநாவிகூட்டிச் சோராமல்நாவியொன்று
மிளகுகூட்டே ... ... ... (௬௬௰)

மிளகிட்டுகொடிவேலிமூலம்வாங்கி மூலரவேகியாழத்திலாட்
டுஆட்டு,இளகிட்டுயிருசாமங்கழிந்தபின்பு யிதமாகக்குன்றியிடைக்
குளிகைகட்டி,மிளகிட்டுகுகையிலிட்டுநெல்லுக்குள்வைத்து வொ
ருதிங்கள்சென்றுமே வாங்கிமைந்தா,புளகிட்டநோய்க்கெல்லா ம
னுபானந்தன்னைப் பாடுகிறேம்பண்டிதமோபார்த்திடமோ (௬௬க)

பார்த்திடவேதிப்பிலித்தூள்பணந்தானென்று பாச்சடாபூப
தியாமுண்டையொன்று, சேர்த்திடவேபதின்மூன்றுசன்னிபோகு
ம் சேரிதற்குயிஞ்சிச்சாற்றிறமாய்நீயும், கார்த்திடவேகொடிவேலி
கியாழத்தூட்டுகடுஞ்சுரக்குப்பதினெட்டுசூலைபோகும், கோர்த்தி
டவேதிரிகடுகுதன்னிலூட்டு கொடுத்தவுடன்சுரமனைத்துங் கூசிப்
போமே ... ... .. ... (௬௬உ)

கூசிப்போமஷ்டகுன்மந்தேனிலூட்டு குலாவியதோர்க்ஷய
ரோகங்கூப்பிட்டோடும், பேசிப்போம்பவுத்திரமுங்கரப்பான்பு
ண்ணும் பிரளவருங்குத்துமுதல்பிலங்கெட்டோடு, மாசிப்போமூ
ண்டுநின்றவியாதியெல்லா மடியுடனேபேர்ந்துபோமப்பாகேளு,
வாசிப்போமென்றுநினைவாயிற்றென்றால் மைந்தனேயிந்தநூல்வா
சிப்பாயே ... ... ... ... (௬௬௩)

கெந்தகதயிலம்

வாசிக்குங்கெந்தகத்தின் தயிலம்வாங்க வகைகேளுபுலத்திய
னேமச்சகேந்திரா,நேசிக்குங்கெந்தியொருபலந்தான்மூன்று நிரு
விகற்பசூதமஞ்சலிங்கமூன்று, ஆசிக்குங்கெவுரிநீமூன்றுதூக்கு அ
ரிதாரமொருமூன்று சிலைதான்மூன்று, பூசிக்குமாயிமுதல் நிருவா
ணிக்கும் புகழாகவாமத்திற்பூசிப்பாயே ... (௬௬௪)

பூசித்துமஞ்சளிலேதயிலம்வாங்கி புகட்டிநீமருந்தெல்லாம
யனம்போலே,பூசிட்டுயெட்டுநாளாட்டிவாங்கி புகழானபரணியி
லேயாட்டிமைந்தா, பூசித்துப்பரணிக்குள்வளப்பக்கல்லால் பொ
ருந்தநீயடைத்தங்கேசந்துவாய்க்கு,பூசித்துக்கற்சுண்ணச்சோறுங்
கூட பொங்கிநின்றவுமிக்கரியுமாட்டிவாங்கே ... (௬௬௫)

வாங்கியதோர்மருந்துதனைச்சிலையிலூட்டு வாகாகச்சந்துவா
யடைத்துச்சுத்தி, வாங்கியதோர்மண்செய்துகச்சுமட்டும் வாகாக
க்குழிவெட்டிப்பாதிமட்டும், வாங்கியதோராட்டெருவை யதிமேல
கொட்டி மணல்கொட்டிநெற்குழிபோல்வளைந்துமின்றும்,வாங்கி
யதோர்பரணிதனையதன்மேல்வைத்து மைந்தனேயாறுதிங்களாட்
டிவாங்கே ... ... ... ... ... (௬௬௬)

ஆறுதிங்களானபின்புதிறந்துபார்க்க வப்பனேநீலநிறத்தயில
மாகும்,வேறுவினையொன்றுமில்லைதயிலங்கொள்ள வேதாந்தத்தா
யெனக்குவிரித்துச்சொன்னாள், மாறுவிதமனல்படாத் தயிலயாச்
சு மகத்தானதயிலமதுமரணமில்லை, யேறுவிதம்வியாதிகட்குவனு
பானந்தா னென்மகனேமஞ்சள்சாறிடித்திடாயே.. ... (௫௫௭)

மஞ்சட்சாறதிலூட்டுமகோதரங்கள்தீரும் வளர்நிம்பச்சாற்றி
லிடக்குளாநோவுதீரும், மிஞ்சாமல்வெருகம்வேர்த்தயிலம்வாங்கி
வேதித்துக்கொடுத்திடவேகுன்மந்தீரும்,அஞ்சாமல்சீனியிலேகொ
ள்ளக்கொள்ள அப்பனேதாதுவெல்லாமமுர்தமூறும், தூஞ்சாம
ல்சாதிக்காய் பத்திரியின்தூளின் துளியிரண்டுதேனில்விட்டுத் தயில
மூட்டே .. ... ... ... ... (௫௫௮)

ஊட்டியுண்ணத்தாதுவெல்லாம்பொருத்துநிற்குமுத்தமனே
கொடிவேலித்தயிலத்தூட்டிக், கூட்டியுண்ணக்கடிவிஷங்கள்தீருந்
தீரும் கொண்டசலஞ்சொரியாட்டால்கடுகிலூட்டு, வாட்டிவிடும்பி
த்தமெல்லாந்திரவென்றால் மைந்தனேவெறுநீசத்தண்ணீராகும்,
வீட்டில்வளர்சிறுகீரைவெந்ததண்ணீர் வேதித்துக்கொடுத்திடவே
மேகம்போமே. ... ... ... ... (௫௫௯)

மேகம்போமித்தயிலங்குடவனிலேயூட்ட மேவிநின்றகளிம்
பற்றுச்சொர்ணமாகும்,மேகம்போம்லோகங்கள்பொன்னுமாகும்
வெள்ளிவங்கமிரும்புசெம்புபொன்னுமாகும்,|மேகம்போமிக்கரு
வைவெளிவிடாதேவேதையாங்காயசித்திநோயுந்தீரும்,மேகம்போ
ஞ்சூதசெந்தூரங்கேளு விபரமுடன்புலத்தியனேவிரும்பிநீயே ()

சூதசெந்தூரம்.

விரும்பிக்கேள்சூதமொன்றுகெந்திரண்டு மீறுமல்கருந்துள
சிநீராலாட்டி, விரும்பிக்கேளிரண்டுதினம்குப்பிக்கேற்றி விபரமு
டன்சீலைமண்தானேமூஞ்செய்து, விரும்பிக்கேள்குப்பியுடவாய்
க்குத்தானும் வெண்ணாப்புப்பச்சைமண்ணுமுப்புங்கூட்டி, விரு
ம்பிக்கேளாட்டியதைவிரல்போல்திரித்து மேல்வாய்க்குளமுத்திர
ன்றாய்வைத்திடாயே. ... ... ... ... (௫௬௧)

வைத்திட்டஅடிகனத்தபாண்டத்தூடு மைந்தனேதமரிட்டும
ணலைக்கொட்டி, வைத்திட்டுவிரல்கனந்தானாலதாக வாகாகவதின்
மேலேகுப்பிவைத்து,வைத்திட்டகுப்பிக்குக்கழுத்துமட்டும் மண
ல்சொரிந்துசூட்டடுப்பில்வைத்துநீயும், வைத்திட்டமந்தாக்கினித
னைமூட்டி மைந்தனேயிரண்டுபத்துசாமமாட்டே ... (௫௬௨)

மாட்டடாகாடாக்கினி பத்துசாமம் வளமாகச்செந்தூர மா
கும்பாரு, நீட்டடாஆறியபின் னிறக்கிப்பாரு நிறமிந்திரகோபம்

